# குடும்பத்தில் ஒரு நபர்

பள்ளிக்கூடத்திலிருந்து தம்மா, வீட்டுக்கு வந்தான்.

வீட்டுக்குள் நுழையும்போதே தொழு முற்றத்தில் பார்த்த காட்சி அவனுக்கு ஆச்சரியமாக இருந்தது.

ஆறே வயசுதான் ஆகிறது என்றாலும் தம்மா புத்திசாலி. யோசித்துக்கொண்டே போய் 'பைகட்டை' ஆணியில் தொங்கவிட்டான். திரும்பி முற்றத்துக்கு வந்தான். தகப்பனார் தொட்டணக் கவுண்டர் கவலையோடு உட்கார்ந்திருந்தார். தாயார் அயிரக்கா, முந்தானையால் கண்ணீரைத் துடைத்துக்கொண்டிருந்தாள். உள்ளூர் நாயக்கர் ஒருவரும், ஒரு வெளியூர்க்காரரும் பழைய கால புஸ்தகம் ஒன்றைப் பிரித்து வைத்துக்கொண்டு யோசித்துக்கொண்டிருந்தார்கள். தங்கள் தொழுவிலுள்ள ஒரே மாடான புல்லை படுத்திருந்தது. அதன் கண்களில் ஒளி இல்லை. மூக்கில் ஈரம் உலர்ந்துபோயிருந்தது. அசைபோடுவதை நிறுத்தி வெகுநேரமாகிவிட்டது. சாணி போடவில்லை. நீர் பிரியவில்லை. மூச்சுவிடுவதற்கு சிரமப்பட்டது. தன்னை மொய்த்துத் துன்பப்படுத்தும் ஈக்களைக்கூட அதனால் விரட்டமுடியவில்லை. அது படும் துயரம் பார்க்கிறவர்களுக்கே சகித்துக்கொள்ள முடியாததாய் இருந்தது.

அயிரக்கா மீண்டும் கண்களை மௌனமாக துடைத்துக்கொண்டதைப் பார்த்தான் தம்மா. அவனுக்கு ஆச்சரியமாகவே இருந்தது. தனக்கோ, தன்னுடைய தங்கை ரம்பக்காவுக்கோ உடம்பு சௌகரியமில்லாமல் இருக்கும்போதுதான் தன்னுடைய தாய் கண்ணீர் வடிக்கப் பார்த்திருக்கிறான்.மாட்டுக்கு உடம்பு சௌகரியமில்லை என்கிறதுக்காக யாரும் அழுவார்களா?

உள்ளூர் கிட்ணப்ப நாயக்கர், கையிலுள்ள வாகடம் புஸ்தகத்திலிருக்கும் பாட்டை திரும்பவும் ராகம் போட்டுப் படித்தார். அதில் சொல்லப்பட்டுள்ள ஒரு பச்சிலை, மாறுபெயரில் இருந்தது. இன்ன பச்சிலைதான் என்று அவர்களுக்குத் தெரியவில்லை. இருந்தாலும் வெளியூரிலிருந்து வந்திருக்கும் சம்மந்தகார நாயக்கர் தன்னை மிதமாக நினைத்துவிடக்கூடாதே என்று நினைத்து, 'இந்தப் பச்சிலைக்கு இப்படியும் ஒரு பெயருண்டு' என்று தெரிந்தமாதிரி சொன்னார். வெளியூர் நாயக்கரோ இதை ஒப்புக்கொண்டால் 'பூ, இவன் இவ்வளவுதானா' என்று நினைத்துவிடுவார்களே என்று பயந்து "அது இல்லை மாமா" என்று மறுத்தார்.

மாட்டின் நிலைமை மோசமாகிக்கொண்டு வந்தது.

இரண்டு நாயக்கர்களும் வெளியேபோய் பச்சிலை பிடுங்கிக் கொண்டு வருவது என்று தீர்மானித்து, மீண்டும் ஒருதடவை

வெற்றிலை போட்டுக்கொள்ள ஆரம்பித்தார்கள். புறப்படுமுன், கிட்ணப்பநாயக்கர் அயிரக்காவை மகிழ்விப்பதற்காக, வாகடத்தைத் திறந்து குரல் எடுத்து திரும்பவும் ஒருதரம் பாடினார். பாடி முடித்து விட்டு, வெளியில் போய் எச்சிலைத் துப்பிவிட்டு வந்து அயிரக்காவைப் பார்த்தார். அயிரக்கா தன் மாட்டையே சோகமாய்ப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

❑

அந்த சந்தனப் புல்லை, அயிரக்காவுக்கு தன் தகப்பனார் சீதன மாகக் கொடுத்தது. அது அவர்கள் வீட்டிலேயே பிறந்த கன்று.

ஒரு நாள்.

அயிரக்காவின் தகப்பனாரான சோலைமலைக் கவுண்டர் மரணப் படுக்கையில் கிடந்தார். பக்கத்தில் உட்கார்ந்திருந்த அயிரக்காவையே பார்த்துக்கொண்டிருந்தார்.

இன்னும் சில நாட்களில் அவளை நிராதரவாய் விட்டுவிட்டுப் போகப்போகிறோம் என்பது கவுண்டருக்கு தெரிந்துவிட்டது. தன் மகளை அருகில் அழைத்தார். அவள் தலைமீது கையால் வருடிக் கொண்டே கண்ணீர்விட்டார். அவளைப் பார்த்து "அம்மா..." என்று மட்டுமே அப்பொழுது அழைக்கமுடிந்தது அவரால். கொஞ்சநேரம் கழித்துச் சிறிது ஆசுவாசமடைந்தபின் அவர் சொன்னார்:

"மகளே என் மகளே... நான் ஆயுசு பூராவும் மாடாய் உழைத்தேன். ஒரு மூக்குத்திகூட உனக்கு நான் செய்துபோட முடியவில்லை உன்னைக் கல்யாணம் பண்ணிக்கூட கொடுக்காமல் நான்.. நான்.. மகளே...," மேற்கொண்டு அவரால் பேசமுடியவில்லை. அதிர்ந்து குலுங்கியது உடல். இருமுகிறமாதிரி அழுதார்.

கொஞ்சம் கழித்து, அவர் தன்னுடைய தொழுவத்தைக் காட்டி, "நம்ம வீட்டுக் கண்ணுக்குட்டி புல்லையை, நீயே வளர்த்து, சீதனமாக வைத்துக்கொள். அது ரொம்ப உயர்ந்த அம்சம். உனக்கு ஒரு குறையும் வராது" என்றார்.

தகப்பனார் இறந்தபின், அயரக்காவுக்கு சகலமும் தன்னுடைய புல்லைதான். தனிமையில் அதனுடன் 'லூஸ் மாதிரி' மணிக்கணக் காய்ப் பேசிக்கொண்டிருப்பாள். கையில் பன்னறுவாள் கொண்டு போய் விடியுமுன்னே தொலைக்காட்டிலிருந்து சுமக்கமுடியாத ஒரு கட்டுப்புல் அறுத்துக்கொண்டு வந்துவிட்டுத்தான் மற்ற ஜோலி.

சாயந்திரம் அவளுடைய தம்பி அயிரணன் புல்லையை நடை பிடிப்பான். ஆஹா, அதுதான் என்ன ஜோராய் நடக்கும் தெரியுமா; தலையையும் சற்றே வாலையும் தூக்கிக்கொண்டு, ஏதோ தேவலோகத் திலிருந்து இப்போதுதான் ஒரு காளை இறங்கி நடந்து வந்தமாதிரி இருக்கும். விவசாயிகள் அதை வைத்த கண் வாங்காமல் பார்த்துக் கொண்டே இருப்பார்கள். 'என்ன அருமையான சந்தனப் புல்லை' என்று தங்களுக்குள் சொல்லிக்கொள்ளுவார்கள். கல்குளம்பு, அதிலும் குத்துக் குளம்பு. குறுங்கால். சன்னமான ஏறுவால். ரெட்டைக் குருத்து முதுகு, ஒட்டுத்தாடி, ரெட்டைநாடி மார்பு, பொய்க்கண் திரட்சி, உடும்புத்தலை, கிலாக் கொம்பு, பட்டு நிறத்திலிருக்கும் அதன் உடம்பு

மேல் வெளிச்சம் மினுமினுக்கும். இத்தனை அழகுகள் அமையப் பெற்றிருந்தது அந்தப் புல்லை!

❑

தொட்டணன் வீட்டுக்கு அயிரக்கா வரும்போது காளையோடு வந்தாள். காளையையும் தன் புதுமனைவியையும் பார்த்துப் பார்த்து பூரித்துப்போனான் தொட்டணன். அவனுக்கு எட்டு ஏக்கர் கரிசல் காடு உண்டு. பண ஏர் வைத்துத்தான் இதுவரை தன் நிலங்களை உழுது வந்தான். இனி யாரோடாவது கூட்டுமாடு சேர்ந்துகொள்ளலாம். கோடை நாட்களில், தான் பல்கம்பி போட, தன் மனைவி மண்வெட்டி இழுக்க, அருகுபூராவும் எடுத்து நிலத்தைக் கண்ணாடிபோல் வைத்துக் கொள்ளலாம். தன் வீட்டுவேலைக்கும், காட்டுவேலைக்கும் ஒத்தாசை செய்ய ஒரு மனைவி வருவாள் என்று மட்டும்தான் தெரியும். நிலத்தை உழ ஒரு காளை, இப்படி ஒரு அருமையான காளையும் வரும் என்று தொட்டணன் கனவிலும் நினைக்கவில்லை. யோகமென்றால் இதல்லவா யோகம்! தொட்டணன் கொடுத்துவைத்தவன் என்று பேசிக்கொண்டார்கள்.

அவன் தன் சக விவசாயி ஒருவனோடு கூட்டுமாடு சேர்ந்து கொண்டான். நிலத்தை மாறிமாறி உழுது பண்படுத்தினான். ஆழமாக உழுதான்.

விதைப்புக் காலம் வந்துவிட்டது. தூரத்தில் எங்கோ மழை பெய்து மண்வாடை காற்றில் மிதந்து வந்தது. தொட்டணன் இழுத்து சுவாசித்தான். ஆனந்தத்தால் அவன் கண்கள் நீர் கோர்த்தது. பலமாக வாய்விட்டு கெக்கெக்கெக்கே என்று சிரிக்கவேண்டும்போல் இருந்தது. வீட்டுக்கு வந்து மனைவியைக் காரணமில்லாமல் அணைத்து முத்த மிட்டான். இடது கையால் அவள் பிடரியை முன்னால் வளைத்து வலதுமுஷ்டியின் புறங்கையால் அவள் முதுகில் சதைப்பிடிப்பான இடமாகப் பார்த்து ஒரு 'இருக்கு' வைத்தான். 'எப்பே' என்று அயிரக்கா பொய்க் கூக்குரல் இட்டாள்.

அன்று இரவு நல்ல மழை.

❑

அந்த வருஷம் விதைப்பு சமயத்தில், மாடுகளுக்கு காணைநோய் பரவியது. தொட்டணனுக்கு பாதி விதைப்புத்தான் முடிந்தது. பாக்கி விதைப்பை முடிக்க, ஒரு பக்கத்துக்கு தன் புல்லைக்குப் பதிலாக அவனே கலப்பை இழுக்கவேண்டியிருந்தது. இதனால் நெஞ்சில் இரத்தம் கட்டி இரண்டு மாசம் இருமல் நோயால் வேதனைப்பட்டான்.

அந்த வருஷம் நல்ல மகசூல். பருத்தி ஒரு தீட்டுத் தீட்டியது. காட்டுப் பாடல்களை பாடிக்கொண்டே அயிரக்கா தேனீயைப்போல பருத்தி எடுத்துச் சேர்த்தாள்.

கைமாத்து வாங்காமலே, வீட்டு வெங்கலப்பாத்திரங்களை அடகு வைக்காமலே அந்த வருஷம் நிலத்தீர்வை போடமுடிந்தது. பருத்தியை நிறுத்து அவர்களுடைய முன்னோர்கள் வாங்கிய கடன்களுக்குப் பல வருஷ வட்டியைக் கட்டிவிட்டார்கள்.

'உடுமாத்துக்கு இன்னொரு சேலை இருந்தால் நன்றாக இருக்கும். தொட்டேரம்மாளின் புண்ணியத்தால் அடுத்த வருஷம் பருத்தி

நன்றாக வெடித்தால் கடனையெல்லாம் நன்றாகத் தீர்த்து, பாக்குக் கலரில் வானரமூட்டிச் சேலை ஒண்ணு வாங்கணும். குழந்தைகளுக்கு நல்ல சட்டைகள் இல்லை. அவருக்கு வேஷ்டி எடுத்து மூணு வருஷ மாச்சி. அடுத்த வருஷம் கட்டாயம் தலையில் கட்டிக்கொள்ள ஒரு துண்டாவது எடுக்கணும்.'

தொட்டணனுக்கு ஒரு வேட்டி ஒரு துண்டு எப்பவும் வெளுத்து வைத்தமாதிரி, கொடியில் முறுக்கி வைக்கப்பட்டிருக்கும். வருஷத்துக்கு ரெண்டு அல்லது மூணுதரம்தான் அதை உபயோகிக்க வேண்டியது வரும். உள்ளூரிலோ பக்கத்தூரிலோ அவர்கள் ஆட்கள் வீடுகளில் நடக்கும் விசேஷங்களுக்குப் போகும்போது மட்டும்தான். மற்றப்படி இருபத்தினாலு மணி நேரம் அந்தக் கிராமத்து விவசாயிகளைப் போலவே அவனும் கோவணம் வைத்தமாதிரியே காட்சியளிப்பான். தலையில் மட்டும் பழைய துணியால் கட்டிய ஒரு லேஞ்சி. அவ்வளவுதான்.

விளக்கு வைக்க கொஞ்ச நேரமிருந்தது. அடுப்பின்மேல் இருக்கும் வெந்நீர்ப் பானையை தொட்டணனும் அயிரக்காவும் பிடித்துக் கொண்டு முற்றத்திற்குக் கொண்டு வந்தார்கள். கருப்பு மண்ணால் செய்த அந்தப் பானையை வலதுகையினால் தொட்டணன் பிடித்திருந்தான். அயிரக்காவும் வலது கையினால் பானையின் விளிம்பின் மறுபக்கத்தை பிடித்துக்கொண்டு, தன் இடது கையை அவனுடைய வலது புஜத்தில் ஊன்றிக்கொண்டு, நகர்ந்து வந்து, முற்றத்தில் பானையைப் பைய வைத்தார்கள்.

அயிரக்கா சேலையை ஏறத் திரைத்துக் கட்டியிருந்தாள். அவளுடைய சிவந்த கால்களின் குதிரைச் சதையில் குத்திய மீன் பச்சை அந்த மாலையின் மயங்கிய வெளிச்சத்தில் தெரிந்தது அழகாக இருந்தது.

முற்றத்தில் ஒரே இடத்தில் நின்று குளித்தால் சகதி விழும் என்று தொட்டணன் நடந்துகொண்டே குளித்து முற்றம் பூராவும் தெளித்தது பேரில் நனைத்துக் குளித்தான். கண்ணாடி வளையல்கள் ஒலிக்க அவனுடைய முதுகைத் தேய்த்தாள் அவள்.

குளித்து முடிந்து, உடம்பிலுள்ள தண்ணீரைக் கைகளினால் வள்ளிசாய்த் துடைத்து உதறிவிட்டு கோவணத்தை மாற்றிக் கொண்டான். பின் அயிரக்காவின் பழைய சேலையை எடுத்துப் போர்த்திக்கொண்டு, அடுப்படியில் சாப்பிட உட்கார்ந்தான். மூன்று வயது நிரம்பிய மகள் ரம்பக்கா கைகளை அகல விரித்துக்கொண்டு இரண்டு பாதங்களையும் சேர்த்துவைத்துக் குதித்துக்கொண்டே தொட்டணனின் முதுகுப் புறமாக வந்து அவனது கழுத்தைச் சேர்த்துக் கட்டிக்கொண்டாள். அவள் கன்னடம், தெலுங்கு, தமிழ் மூன்று பாஷைகளையும் கலந்தேதான் பேசுவாள். அதைக் கேட்டுக் கேட்டுப் பெற்றவர்கள் மகிழ்ந்து பூரித்துப் போவார்கள். அவர்களுடைய பக்கத்துவீட்டுக் காரர்கள் தெலுங்கும் தமிழும் பேசுகிறவர்கள். இதனால் அவளுக்கு மூன்றையும் கலந்தே பேசிப் பழக்கமாகிவிட்டது.

தொட்டணனும் அயிரக்காவும் தங்கள் குடும்ப விவசாய விஷயங்களைப் பற்றிப் பேசினார்கள். அவர்களுடைய கிராமத்தில் நடக்கும் கால்நடை தொத்துநோயைப் பற்றிப் பேசினார்கள். கிராம மக்களில் சிலர், கடவுள் நம்பிக்கையை விட்டுவிட்டு கால் நடைகளுக்கு நோய்த்

தடுப்பு ஊசி போட்டுக்கொள்வதைக் கேலி செய்து பேசினார்கள். சிரித்தார்கள். இவர்கள் சிரிக்கும்போதெல்லாம் ரம்பக்காவும் சிரிப்பாள். அவள் தன் தகப்பனின் முதுகில் சாய்ந்துகொண்டு முன்னும்பின்னும் ஆடினாள். தொட்டணன் தன் இடது கையால் கழுத்தைச் சுற்றியுள்ள மகளின் இரு கைகளையும் பிடித்துக்கொண்டு சூடான கம்மஞ் சோற்றின்மேல் வைக்கப்பட்டுள்ள மணம் நிறைந்த காணத் துவையலை தொட்டுத்தொட்டு, தன் மகளின் இசைவுக்கு ஏற்ப முன் குனிந்தும் நிமிர்ந்தும் ஆடிக்கொண்டே விழுங்கினான். ஆட்டத்தின் சுகத்தில் லயித்து ரம்பக்கா அப்படியே தூங்கிப்போனாள்.

தொட்டணன் கும்பாவில் கை கழுவிக்கொண்டான். வாயைக் கொப்பளித்து அந்தக் கும்பாவிலேயே துப்பினான். சேலையில் கையைத் துடைத்துக்கொண்டு, மகளை பக்குவமாக முதுகிலிருந்து மடிக்குக் கொண்டுவந்து கிடத்தி கருணை நிறைந்த பார்வையை அவள் மீது சொரிந்து அவள் தலையைப் பைய வருடினான். அப்புறம் நீண்ட பெருமூச்சு ஒன்று விட்டான்.

பழைய கோணிச் சாக்குகளை விரித்து, அழுக்குத் துணி மூட்டைகளையும் பலகைகளையும் தலையணைகளாக வைத்துக்கொண்டு அவர்கள் படுத்துக்கொண்டார்கள்.

❑

தலைக்கோழி கூப்பிட எழுந்திருந்து தொட்டணன் தொழுவைத் தூத்து சாணியைக் குப்பையில் கொண்டுபோய்ப் போட்டுவிட்டு, பருத்திக்கொட்டை ஆட்ட ஆரம்பித்தான். ஆட்டிக்கொண்டிருக்கும் போது தற்செயலாய்ப் புல்லையைப் பார்த்தான். கவனித்துப் பார்த்தான்; புல்லை கூளம் தின்னாமல் நின்றுகொண்டிருந்தது. அந்த நேரத்தில் அது அப்படி நின்றுகொண்டிருக்க அவன் பார்த்ததில்லை; ஆட்டுகிறதை நிறுத்திவிட்டுப் புல்லையின் கிட்டப்போய் அதைத் தடவி, தட்டிக்கொடுத்தான். கொஞ்ச நேரம் அப்படியே நின்று பார்த்துக்கொண்டிருந்தான், அசை போடக்காணோம்.

அயிரக்காவைக் கூப்பிட்டு விஷயத்தைச் சொன்னான். பாத்திரங்களை விளக்கிக்கொண்டிருந்தவள் சாம்பல் ஒட்டிய கையோடு அப்படியே வந்தாள். இடதுகையால் புல்லையின் தலையை அன்போடு நுனிவிரல்களால் சொறிந்து கொடுத்தாள். அதன் முதுகைத் தடவினாள். இந்தப் பாசமான செய்கைகளை அது ஏற்றுக்கொள்ளவில்லை. “அதுக்கு எவ்வளவு ‘அச்சலாத்தி’ யாக இருக்குதோ பாவம்.”

‘நேத்தே கவனிச்சேன். ஒரு மாதிரியாய்த்தான் இருந்தது.’ அயிரக்கா தயங்கிச் சொன்னாள். ‘நடுச்சாமத்திலிருந்து எனக்கு தூக்கமே பிடிக்கவில்லை. என்னமோ மாதிரியெல்லாம் கனவுகள் வந்தது. எனக்கென்னவோ பயமா இருக்கு ” என்றாள். அவளுடைய துடைகள் லேசாக நடுங்கின.

“கோட்டி; கோட்டி, ஒன்றுமில்லை. இதற்குப் போய்ப் பிரமாதப் படுத்துறயே” என்று தொட்டணன் சொன்னான். ஆனாலும் அவளுடைய பயத்தின் சலனம் அவனையும் தொட்டது.

காலையிலிருந்து குழந்தைகள் தவிர ஒருவரும் கஞ்சி குடிக்கவில்லை. அயிரக்கா வாகடம் கிட்ணப்ப நாயக்கர் வீட்டுக்கு ஓடினாள். இவள் போன நேரம் அவர் வீட்டில் இல்லை, வெளியூர் போயிருந்தார்.

சதா அவர் 'சர்க்கோடு' தான். சுத்தி ஒரு பத்துக்கல் தொலைவுக்கு மாட்டு வைத்தியத்துக்கு அவரைத் தேடி வந்துகொண்டே இருப்பார்கள்.

உண்மையில் கிட்ணப்ப நாயக்கருக்கு மாட்டு வைத்தியம்பற்றி ஒரு இளவும் தெரியாது. அவருடைய தகப்பனார் வாகடம் நல்லண்ண நாயக்கருக்கு எங்கிருந்தோ எப்படியோ வாகடம் கிடைத்தது. அதை அவர் ரகசியமாக, யாருக்கும் காண்பிக்காமல் படித்து, சொந்த யுக்தி அனுபவம் முதலியவைகளை வைத்து ஓரளவு மாட்டு வைத்தியம் பார்க்கத் தொடங்கி வாகடம் நல்லண்ண நாயக்கர் என்று பெயரெடுத்துவிட்டார். தகப்பனார் மண்டையைப் போட்டதும் கிட்ணப்ப நாயக்கர் வாகடத்தைக் கையில் எடுத்துக்கொண்டார். ஒரு குண விசேஷம் என்னவென்றால் வைத்தியத்துக்கு முக்காத்துட்டுக்கூட வாங்கமாட்டார்கள். கிராமத்து ஜனங்களுக்கு இவர்கள் கடவுள்மாதிரி.

கிட்ணப்ப நாயக்கரின் மனைவி அச்சம்மாள், அவர் வந்ததும் வரச் சொல்லுவதாகச் சொன்னாள். அவளுக்கு தன் புருஷனுக்குள்ள பெயரைக் கண்டு ரொம்பப் பெருமை, வந்த இடத்தில் மாட்டின் நிலையை மறந்து, இருவரும் அரைமணி நேரம் சேலையின் விலை, குழந்தைகளின் சௌக்கியம், குளியாம இருக்கியா முதலிய விஷயங்களைப்பற்றிப் பேசிவிட்டுப் பிரிந்தார்கள்.

அயிரக்கா வீடு திரும்பும்போது இளம் மதியமாகிவிட்டது. புருஷனும் மனைவியும் ஓயாமல் கவலைப்பட்டார்கள். தன் புஞ்சை எல்லாத்தையுமே உழுது ரெடி பண்ணியாச்சி. கூட்டுமாட்டுக்காரன் புஞ்சைதான் பாக்கி. நாம முத உழ ஆசைப்பட்டமாதிரிதானே அவனுக்கு இருக்கும். அவன் ஒரு புத்திகட்டை. மாட்டுக்கு சுகமில்லைன்னு சொன்னா, பதிலுக்கு உழக்கொடுக்க மனசில்லைன்னு நினைச்சிட்டான் முதலில். சித்திரைமாச உழவு பத்தரை மாத்துத் தங்கம். அவன்மேல் சொல்லவும் குத்தமில்லை. அவன் நிலையில் நாம இருந்தாலும் அப்படித்தான் நினைப்போம், "ஏளா, கூட்டு மாட்டுக்காரனுக்கு ஏர்க் கழிக்க, மாட்டுக்குப் பதிலாக நான் நின்று கலப்பை இழுப்பேன். அண்ணாரப்பக் கவுண்டர் மகன் நான். கொடுத்த வாக்கு மீறமாட்டேன். என் கூட்டாளி மனசுப்படியே நடப்பேன்" என்றான் தொட்டணன்.

அயிரக்காவால் இதை மறுத்துச் சொல்லமுடியவில்லை. கோடை உழவில் அதுவும் இரண்டு மாடுகளில் ஒரு மாட்டுக்குப் பதிலாக ஒரு மாட்டுக்குச் சமமாக கலப்பை இழுப்பதாக சபதம் கூறுவதை நினைக்கும்போது அவளுக்கு உடம்பு கூசியது.

❑

பச்சிலை பறிக்கப் போயிருந்த நாயக்கர்கள் கட்டுடன் திரும்பி வந்தார்கள். ஒரு பச்சிலை விஷயத்தில் மேலும் ஒரு சந்தேகம் வந்துவிட்டதால் ஒன்றுக்குப் பதிலாக, அவரவர்களுடைய இஷ்டத்துக்கு விட்டுக்கொடுத்து, ஆளுக்கு ஒன்றாக இரண்டு பச்சிலைகள் கொண்டு வந்திருந்தார்கள். அரைத்து, கவாளம் கொடுத்தார்கள். கிட்ணப்ப நாயக்கர் தான் போன இடங்களிலெல்லாம் 'ஒரே தேரத்து' மருந்தில் எப்படி மாடுகளுக்கு குணம் கண்டது என்பதையெல்லாம் விவரித்து

"அயிரக்கா, ஒண்ணுஞ்செய்யாது பயப்படாதே இப்போ ஒரு நிமிட்டில் மாடு அசைபோட ஆரம்பிக்கும் பார்" என்று சொல்லிவிட்டுப் போய்விட்டார்கள்.

பொழுதூர, மாட்டுக்கு நிலைமை ரொம்பவும் மோசமாகிவிட்டது. நாலு கால்களையும் நீட்டி அடிக்கொருதரம் தரையில் இழுக்க ஆரம்பித்தது. சொங்கு வடிவது நிற்கவில்லை. மூச்சுத் திணறி கிருட் கிருட் என்ற சத்தம் விட்டுவிட்டு கேட்டுக்கொண்டே இருந்தது. தொட்டணனும் அயிரக்காவும் ஏதும் செய்ய இயலாதவர்களாய் பார்த்துக்கொண்டே இருந்தார்கள். அவர்கள் செய்யமுடிந்ததெல்லாம் அதன்மீது மொய்த்த ஈக்களை விரட்ட முடிந்ததுதான்.

திடீரென்று புல்லை வாய்பிளந்து 'அம்மா' என்று பயங்கரமான நீண்ட ஒரு கத்தல் இட்டது. அவர்கள் தங்கள் வாழ்நாளிலேயே இப்படி மனசைப் பிழியும் ஒரு குரல் அதன் கண்டத்திலிருந்து வெளி வந்து கேட்டதில்லை. அந்த ஒலி அவர்களுடைய உடம்புக்குள் மாத்திர மல்ல, எலும்புக் குருத்துகளுக்குள்ளெல்லாம் குத்திப் புகுந்தது. உலர்ந்த உதடுகளுடனும், பீதிநிறைந்த கண்களுடனும் ஒருவரை ஒருவர் பார்த்தார்கள். முதல்தடவையாக தொட்டணனுடைய கண்களிலிருந்து இரண்டு பெரிய சூடான கண்ணீர்த்துளிகள் புல்லையின்மீது விழுந்தன. அயிரக்கா எழுந்து நின்றாள். இரண்டு கைகளையும் தலை மீது குவித்து, "ஹே தொட்டேரம்மா. ஹொன்னு தாயி, உனக்கு நாங்கள் என்ன செய்தோம்; எங்களை இப்படி சோதிக்கலாமா" என்று உணர்ச்சிப் பிரவாகமாய் சொல்லித் தேம்பினாள். தொட்டணனுக்குத் தன்னுடைய குலதெய்வத்தின் அந்தப் பெயர்களை உச்சரிக்கக் கேட்டதும் உடம்பு புல்லரித்தது. பின் அவள் வீட்டினுள் சென்று மஞ்சள் அரைத்து சிறு துணியில் நனைத்து, அஞ்சறைப் பெட்டி யிலிருந்த இரண்டு வெள்ளி ரூபாய்களை எடுத்துத் துடைத்து மஞ்சள் துணியில் முடிந்து, தொட்டேரம்மா கோயில் இருக்கும் திசை நோக்கி வைத்து, மண்டியிட்டு வணங்கிப் பிரார்த்தித்தாள். பின்பு தரையில் ஒரு சிட்டிகை மண்ணைக் கிள்ளித் தன் நெற்றியில் பூசிக்கொண்டு புல்லை யின் நெற்றியிலும் கொண்டுபோய்ப் பூசினாள். பிறகு அந்த மஞ்சள் காணிக்கையை அரங்கு வீட்டினுள் கொண்டுபோய், சுத்தமான புது அடுக்குப் பானைக்குள் வைத்து மூடி அந்தப்பானையைத் தொட்டு ஈரம்படிந்த தன் கண்களில் ஒத்திக்கொண்டாள்.

அன்று செவ்வாய்க் கிழமை, மில் விடுமுறை ஆதலால் பக்கத்து வீட்டு முத்தையா கோவில்பட்டியிலிருந்து வந்திருந்தான். அந்த மில் தொழிலாளி தன் பக்கத்துவீட்டுக்காரரின் மாட்டுக்கு உடம்பு சௌகரியமில்லை என்று கேள்விப்பட்டுப் பார்க்க வந்தான். அவன் ஆதியோடு அந்தமாக விஷயங்களை அயிரக்கா மூலமாகக் கேட்டு ஆத்திரமடைந்தான். "உங்களுக்கு என்ன பைத்தியமா?", என்று கேட்டான். உடனே கோவில்பட்டி போய் வெட்னெரி டாக்டரை கையோடு கூட்டிக்கொண்டு வரச்சொல்லி தொட்டணனை வற்புறுத் தினான். கொஞ்சம் தாமதித்தாலும் மோசக்கேடு வந்து சேரும் என்று எச்சரித்தான். மந்திரத்தால் ஒன்றும் மாங்காய் விழாது என்று எடுத்துச் சொன்னான். நோய்த்தடுப்பு ஊசிபோட மறுத்த அவளுடைய மூடத் தனத்தை எள்ளி நகையாடினான்.

தொட்டணனுக்கு, முத்தையா சொன்னதை அப்படியே ஏற்றுக் கொள்ள முடியவில்லை. தங்களுடைய கடவுள் பக்தியை அவன் கண்டித்துப் பேசியதுமாதிரி இருந்ததைக் கேட்டு உள்ளூர ஆத்திர மடைந்தான். ஆனால் அயிரக்காவுக்கோ முத்தையா சொன்ன தெல்லாம் சரி என்றே பட்டது. தொட்டணனை கோவில்பட்டி போகச் சொன்னாள். தன் மாட்டை எப்படியாவது காப்பாற்றியே தீருவது என்று தீவிரம் கொண்டாள்.

முத்தையா அவர்களுக்குப் பணஉதவி செய்தான். கால்நடை ஆஸ்பத்திரிபற்றிய விவரங்களையெல்லாம் தொட்டணனின் மனசில் பதியும்படி எடுத்து விவரமாகச் சொன்னான். தொட்டணன் சரசர வென்று கொடியில் முறுக்கிச் சுருட்டியிருந்த வேட்டியை உதறிக் கட்டிக்கொண்டு துண்டை உதறி மேலே போட்டுக்கொண்டான். முட்டைக்கோல் நிறைய எண்ணெயை எடுத்து தலைகுளுர தேய்த்துக் கொண்டான். கால், கை, முகமெல்லாம் தேய்த்து முடிந்ததும், வேட்டி யின் சொருகு நுனியில் பணத்தை முடிந்து, செருப்பு அணிந்து கொண்டான். இப்பொழுது தொட்டணன் பிரயாணத்துக்கு ரெடி.

❑

பிளாக் டெவலப்மெண்ட் ஆபீஸில், கண்ட அதிகாரிகளை யெல்லாம் தொட்டணன் ஏற்கனவே அவனுடைய ஊரில் வைத்துப் பார்த்தவர்கள்தாம். ஆனால் அதில் யார் யார் இன்னார் என்று தெரியாது. அவர்கள் கிராமத்துக்கு வருவதும் போவதும் பார்க்கவே ஒரு வேடிக்கையாக இருக்கும். என்ன சோலிக்காக வருகிறார்கள், என்ன சோலிக்காகப் போகிறார்கள் என்றே தெரியாது. சர்க்கஸில் ஒரு சைக்கிளில் கூடியபட்சம் எத்தனை பேரை ஏற்றமுடியுமோ அத்தனைபேரையும் ஏற்றிக்கொண்டு சுற்றிவருகிற மாதிரி இவர்கள் தங்கள் ஜீப்பில் எத்தனை பேர் அதிகம் கொள்ளுமோ அதற்கும் அதிகமானவர்கள் அதில் வருவார்கள். அவர்கள் கூட ஒரு பெண்ணும் வந்திறங்குவாள் ஜீப்பிலிருந்து. அந்தப் பெண் வரும்போதெல்லாம் ஒவ்வொருவிதமாக தன்னுடைய கூந்தலை முடிந்திருப்பாள். அடேயப்பா சேலைகள்தான், அதில் கலர்கள்தான் எத்தனைவிதம்! அந்த அம்மாள் இறங்கி கைகளை அப்படியும் இப்படியும் வீசி ஒரு சின்ன யானைக்குட்டியே வந்தமாதிரி நடந்து வருவாள்.

தொட்டணன் இப்பொழுது வெட்னரி டாக்டர் மேஜைக்கு முன்னால் போய் நின்றான். இடுப்பில் துண்டைக் கட்டிக்கொண்டு ஒரு கும்பிடு போட்டான். தலை அசைப்பாலேயே அதை ஏற்றுக் கொண்டார் டாக்டர். முதலில் ஊர், அப்புறம் மாட்டுக்கு என்ன செய்கிறது, இரண்டொரு அறிகுறிகளைச் சொன்னவுடனே 'சரி நிறுத்து' என்ற பாவனையில் கையை அசைத்தார். உடனே தீப்பெட் டியை எடுத்து அதில் ஒரு குச்சியை ஒடித்து தன்னுடைய பல் இடுக்கு களிலுள்ள ஊத்தையை குத்தி இழுத்து இழுத்து நாக்கில் தடவிக் கொண்டார். அப்புறம் குச்சியை முகர்ந்து பார்த்து தூர எறிந்துவிட்டு, "சரி பீடிஓ இடம் போய்ச் சொல்லிவிட்டு வா " என்று கை காண்பித்து அனுப்பினார். இந்த டாக்டருக்கும் 'பீடிஓ' வுக்கும் சதா தகராறு. அவசரக் கேஸ்களுக்கு ஜீப் கொடுத்து உதவமாட்டார். தொட்டணன் விஷயத்திலும் அப்படியே ஆயிற்று.

டாக்டரும் அவனும் கார் ஷெட்டுக்கு நடந்து வரும்போது ஜீப் அவர்களைக் கடந்து வேகமாகப் போனது. அதில் அந்த யானைக் குட்டி அம்மாள் இருந்தாள். அவள் கையில் கருவேப்பிலைக் கொத்து இருந்ததை தொட்டணன் பார்த்தான்.

இப்பொழுது ஜீப் மாத்திரம் இருந்தால் கிராமத்துக்குப் போய் ஒரு விவசாயினுடைய மாட்டின் உயிரைக் காப்பாற்றிவிடலாம் என்று நினைத்துக்கொண்டே நடந்தார் டாக்டர்.

அவர்கள் பஸ்ஸிலிருந்து இறங்கி, நடந்து, ஊர் வந்து, வீட்டின் வாசலை மிதிப்பதற்கும், வீட்டினுள்ளிருந்து அழுகைச் சத்தம் கேட்பதற்கும் சரியாக இருந்தது.

❑

தொட்டணனும் அயிரக்காவும் சோகமே உருவெடுத்தமாதிரி உட்கார்ந்திருந்தார்கள். அவர்களுடைய துயரத்தை வர்ணிக்க வார்த்தைகள் இல்லை.

சுற்றத்தார் எல்லோரும் ஒவ்வொருவராக துக்கம் விசாரிக்க வந்து கொண்டே இருந்தார்கள்.

பிரேதத்தை அவர்கள் சக்கிலியரிடம் ஒப்படைக்க மறுத்துவிட்டார்கள். "பெற்ற பிள்ளையைப்போல் வளர்த்து சக்கிலியர்கள் கையில் தூக்கிக்கொடுக்கவா, முடியாது" என்று அயிரக்கா சொல்லிவிட்டாள். அதோடு அன்று செவ்வாய்க்கிழமை வீட்டுக்குப் பின்புறமுள்ள தங்கள் காலிமனையிலேயே புதைத்து, பால் வார்த்தார்கள்.

கிராமத்துப் பெரியவர்கள் வந்து விசாரித்து ஆறுதல் சொன்னார்கள்.

கிராம முன்சீப் ஐயர் சொன்னார், "தொட்டணா, மனசைத் தேத்திக்கோ, மாடு, மனைவி, மக்கள், கழனி இதெல்லாம் வாய்க்கிறது, ஒருவனுக்கு அவன் பூர்வ ஜென்மத்தில் செய்த பாக்கியம்னு பெரியவா சொல்லுவா. இந்தமாதிரி ஒரு காளை யாருக்கு இனி வாய்க்கப்போறது. ரிஷபவாகனம்மாதிரி இருந்தது. ஒனக்குக் கொடுத்து வெச்சதெல்லாம் அவ்வளவுதான். எல்லாம் ஈஸ்வர சங்கல்பம்; நம்மால் என்ன செய்யக் கிடக்கிறது" என்றார்.

"சாமி, என் பிள்ளைகளில் ஒண்ணு இறந்திருந்தால்கூட நான் இவ்வளவு மலைக்கமாட்டேனே. எனக்கு என்ன செய்கிறதெண்ணு தெரியலையே சாமி. நான் என்ன செய்ய" என்று குமுறினான் அவன்.

"தொட்டணா, வார்த்தைகளை இப்படிச் செலவழிக்காதே நீ என்ன செய்வாய், துக்கம் உன்னை இப்படிப் பேச வைக்கிறது" என்றார் அவர்.

அவனுடைய ஆசைக்கோட்டைகள், கனவுகள் எல்லாம் தகர்ந்து தரைமட்டமாகி விட்டது.

மூணு நாளைக்கு அப்புறம்.

ஒரு நாள் காலை.

கூட்டு மாட்டுக்காரன் வந்து நின்றுவிட்டான். அயிரக்காவும் தொட்டணனும் உட்கார்ந்திருந்தார்கள். தொட்டணன் மௌனமாய் எழுந்தான். யாருடனும் ஒன்றும் பேசவில்லை. நுகக்காலை எடுத்து தோளில் வைத்துக்கொண்டான். தலையைக் கவிழ்த்துக்கொண்டே அவன் பின்னால் நடந்தான்.

அயிரக்கா இவைகளை ஒன்றுவிடாமல் பார்த்துக்கொண்டிருந்தாள். தன் புருஷன் நுகக்காலோடு தலை கவிழ்ந்து போவதையே பார்த்துக் கொண்டிருந்த அவள், முகத்தை தன் இரண்டு கைகளிலும் புதைத்துக்கொண்டாள்.

◆

சாந்தி
ஏப்ரல் 1963